22nd August 1961]

atmosphere. Apart from that, it is a question of convenience and timing of removal of these statues. I can assure the House that this would be kept in view by the Government and whenever opportunities occur, proper substitutes would be placed and these statues would be placed in suitable places elsewhere?

**SRI S. RAMALINGA PADAYACHI :** நம் நாட்டிலே இங்கிலாந்திலுள்ள பெரும் தலைவர்களுடைய உருவச்சிலைகள் இருக்கின்றன. இப்பொழுது நம் இரு நாடுகளுக்கிடையே நல்லெண்ணம், நல்லுறவு இருக்கின்றன. அந்தச் சிலைகளை எல்லாம் அகற்ற வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அங்கிருந்து வரக்கூடியவர்களுடைய நல்லெண்ணம் பாதிக்கப்படுமே. ஆகவே அவற்றை அகற்றாமல் இருப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** அன்னிய நாட்டினருடைய அதாவது; பிரிட்டிஷாருடைய நல்லெண்ணம் இருப்பதற்கு இந்தச் சிலைகளை எல்லாம் தொடர்ந்து வைத்துக்கொண்டிருந்தால் என்ன என்று அங்கத்தினர் சொல்லுகிற மாதிரி இருக்கிறது. சிலைகளை வைத்துத்தான் நல்லெண்ணம் ஏற்பட வேண்டும் என்பதல்ல.

**SRI N. K. PALANISAMI :** அன்னியருடைய சிலைகளை அகற்றி நம் நாட்டுத் தலைவர்களுடைய சிலைகளை வைப்பதில், தமிழ் நாட்டு அரசியல் தலைவர்களுக்கு முக்கியமான இடம் கொடுக்கப்படுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இது வெறும் அரசியல் தலைவர்களுக்கு மட்டுமல்ல. நமது நாட்டிலுள்ள தேசிய கவிஞர்கள், தேசிய விஞ்ஞானிகள், தேசிய கலைஞர்கள் இவர்களுக்கெல்லாம் முக்கியத்துவம் கொடுக்கப்படும். அரசியல் வாதிகளிலும் இடம் பெறக்கூடிய மாபெரும் தலைவர்கள் இருப்பார்களேயானால் அதைப்பற்றியும் கவனிக்கப்படும்.

*Extension officer (Industries)*

*1332 Q.—**SRI T. R. RAMAMIRTHA THONDAMAN :** கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட்டார வளர்ச்சிப் பகுதிகளில் தொழில் அதிகாரியின் வேலை என்ன ?

(இ) தஞ்சை ஜில்லாவில் ஒவ்வொரு பிளாக்கிலும் இவர்கள் முயற்சியினால் ஆரம்பிக்கப்பட்ட வேலைகளின் (இரண்டாவது திட்ட காலத்தில்) விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) & (இ) The information [a] is placed on the table of the House.

*Town Planning Schemes (Panchayats)*

*1333 Q.—**SRI M. D. THIAGARAJA PILLAI (on behalf of SRI N. R. THIAGARAJAN) :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஒவ்வொரு மேஜர் பஞ்சாயத்து ஊருக்கும் டவுன் பிளானிங் ஸ்கீமை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The provisions of the Town Planning Act are being extended by stages to all the Panchayats in the State with a population of 5,000 and above and which has an Executive Officer to administer and it is for the Panchayats to implement the Town Planning Scheme in their respective areas.

---

[a] Printed as Appendix V on page 615-620 infra.